1951 சனவரி

# தமிழ்ப் பொழில்

துணர் ௨௬—மலர் ௰



திருவள்ளுவர் யாண்டு ௲௯௮௨

விகிருதி—தை

(1951, சனவரி)

கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சை

# தமிழ்ப் பொழில்.

## உள்ளுறை.


திருவள்ளுவர் ஆண்டு 1982.

துணர் ௨௬ விகிருதி--தை மலர் ௰

1951, சனவரி




குறிப்பு:—தமிழ்ப் பொழில் ஒவ்வொரு ஆங்கிலத் திங்கள் 21 ஆம் நாளே குறைந்த அஞ்சற் செலவில் அனுப்பப்பெறுவது. பிறநாட்களில் அனுப்பும்படி வேண்டுபவர் முழு அஞ்சற்றொகையையும் ஏற்றுக்கொள்ளல்வேண்டும்.


Edited and Published by A. Ganapati, Karanthai Tamil Sangam, Tanjore.
Printed by A. Ganapati, at the Co-operative Press, Tanjore, Limited,

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு.

துணர் உசு } திருவள்ளுவர் யாண்டு சகஅஉ விகிருதி—தை 1951—சனவரி { மலர் ௰

## பொங்கல் திருநாள்.

தமிழ்த் திருநாளாய இந் நன்னாளிலே நம் பொழிலன்பர்களும், சங்க அன்பர்களும், ஏனைய தமிழ்ப் பெருமக்களும், பிறரும் எவ்வகை நலங்களும் பெற்று என்றென்றும் சிறப்பாக வாழ வேண்டித் திருவருளைப் போற்றுகின்றோம். உலகில் எழுந்த அல்லற்படை தடிந்த இக்கதிரவன் திருநாள் முதல் உலகம் பழைய மேம்பாட்டினைப் பெற்றுச் செழிக்கும் என்று நினைக்கிறோம்.

எமக்குப் பொங்கல் வாழ்த்து அனுப்பிய அன்பர்களெல்லாருக்கும் எம் நன்றி தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

* * * * *

### வெள்ளணி விழா

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து 20 ஆவது பட்டத்தில் எழுந்தருளி அருட் செங்கோல் செலுத்தும் தெய்வத்திரு. அம்பலவாண தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் அவர்கள் வெள்ளணி விழா 1950, திசம்பர், 22உ பிற்பகல் ச மணிக்கு நம் கரந்தைத் தமிழ்ச் சங்கப் பெருமன்றத்தில் சங்கத்தலைவர் தலைமையில் கொண்டாடப் பெற்றது. அது போது தெய்வத்திரு. மகா சந்நிதானம் அவர்கட்கு ஒரு பாராட்டு விண்ணப்பம் செய்துகொள்ளப் பெற்றதுடன் பல அறிஞர்கள் மகா சந்நிதானம் அவர்களின் சிறப்பைப் பாராட்டினார்கள்.

* * *

அணித்தில் பல்கலைத்தேர்வில் வெற்றிப் பெற்ற மாண வர்கட்குப் பட்டமளிப்பு விழாவில் அவர்கட்கு வாழ்த்துரை கூறிய மாட்சிமிக்க திருவாளர் இராசேந்திரப் பிரசாதரவர் கள் நம் நாட்டில் நாட்டு மொழிக்கு முதன்மை கொடுக்க வேண்டியது இன்றியமையாத தென்றும், கொடாமை யினாலே மக்கள் தாய்மொழி இலக்கிய அறிவு நிரம்பப் பெறாத அதனால் தம்மவருடன் கூடிவாழும் சிறந்த பண் பும் ஒற்றுமையும் குலைகின்றன என்றும் வற்புறுத்தி, அத னால் தாய்மொழிப் பயிற்சியை மேம்படுத்த வேண்டுமென உணரவைத்தார்கள். இப்பொன் மொழிகளை யாவரும் கூர்ந்து ஆராய்ந்து பின்பற்றுவார்களாக.

* * * * *

இந்தியக் குடியரசுத் தலைவர் திருவாளர் இராசேந்திரப் பிரசாதர் அவர்கள் முதலிய பேரறிஞர்கள் தாய்மொழிப் பயிற்சியை வற்புறுத்தும் பொழுது சிலர் எதிர் முறையில் செல்வது இரங்கத்தக்க தாகும். எளிதில் விளங்கக் கூடிய தாய்மொழிச் சொற்கள் இருக்கும் பொழுது பிறமொழிச் சொற்களை வழங்குவது குறித்து அறிஞர் எல்லாருமே பல கூட்டங்களிலும் பல இடங்களிலும் கண்டிப்பதைக் கேட் கிறோம். இவ் வுரைகளை புறக்கணிக்கும் மாறான நிகழ்ச்சிகளைப் பல விடத்தும் காண்கிறோம். ஆங்கி லத்திலும்கூட நூல் எழுதுங்கால் ஆங்கிலச் சொற்களை விடுத்துப் பிறமொழிச்சொற்களைப் பயன்படுத்துதல் இழுக் கெனக் கருதப்படுகிறது. ஒரு நூலை மதிக்குங்கால் அந் நூலிற் காணப்படும் தாய்மொழிச் சொற்களின் பெருக்க மும் ஒரு குறிப்பாக ஏற்கப்படுகிறது. உலக வழக்கிலுங் கூடத் தாய்மொழிச்சொற்கள் எளிதில் பேசப்படுமேயன் றிப்பிறமொழிச் சொற்கள் பேசப்படுவதில்லை. இதை மன திற் கொள்ளாது போலிப்பெருமை கருதி வாயில் வராத பிற மொழிச் சொற்களையே பேச முயல்வாரு முண்டு. தாய் மொழிச் சொற்களைப் பேசுவாரை இகழ்வாரும், கீழோராக எண்ணுவாரும், அறியாதாராக நினைப்பாரும், நாகரீக மற்ற வராகக் கூறுவாரும் உண்டு. இவர், தம்மையே அறி யாதவராகவும் நாகரிக மற்றவராகவும் அறிவதில்லை. இது வியக்கத் தக்கது.

உ

# மதிப்புரை.

தமிழ் மணி திரு. சாமி. வேலாயுதம் பிள்ளை அவர்கள்.

## சிவஞான சித்தியார் ஆராய்ச்சி.

தூத்துக்குடி சித்தாந்தப் பேராசிரியர், திரு.
ந. சிவகுருநாத பிள்ளை இயற்றி,
திருவாவடுதுறை ஆதீனத்து 20-ஆவது குரு மகா சந்நிதானம்
சைவ மெய்த்திரு. அம்பலவாண தேசிக சுவாமிகள் ஆதரவில்
வெளியிடப் பெற்றது.

**அழகிய பதிப்பு:** 140 பக்கங்களுடனும் 6 படங்களுடனும் ரூ. 1—12—0-க்கு நாரசிங்கன்பேட்டை அஞ்சல் திருவாவடுதுறை ஆதினத்திலும், நூலாசிரியரிடத்தும், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திலும் கிடைக்கப்பெறுவது.

பதினன்கு சாத்திரங்களையும் 12 திருமுறைகளையும் பன்முறை வெளியிட்டுள்ள சென்னை சைவசித்தாந்த மா சமாசத் தலைவர் திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார் பி. ஏ., பி. எல்., அணிந்துரையும் அண்ணாமலை நகர், சித்தாந்தக் கலாநிதி, திரு. ஒளவை சு. துரைசாமி பிள்ளை எழுதிய ஆசிரியர் வரலாறும் கொண்டு விளங்குவது.

இதன் முன்னுரையில் இந்நூல் வந்த வகையும், தோற்றுவாயில் சித்தியாரின் பழம் பதிப்புக்களின் சிறப்பும் திருவாவடுதுறை ஆதீனத்தார் சித்தாந்தத்திற்கு இதுவரை செய்துள்ள தொண்டுகள், அறிவுக்கொடை, பொருட்

---

இந்த நினைவு, யாம் ஒரு நாள் புகைவண்டித் தொடரில் செல்லும்போது கண்ட காட்சியினால் எழுந்தது. புகைவண்டி நிலையங்களில் உள்ள ஒதுங்கிடங்களில் ஆண்பாலரையும் பெண்பாலரையும் குறிக்கஇட்டிருக்கும் பொம்மைகளுக்கு அருகில் எழுதப்பெற்றிருந்த ஆண்கள், பெண்கள் என்ற சொற்களைக் கலைத்துவிட்டு அவ்விடங்களில் புருஷர்கள், ஸ்திரிகள் என்ற சொற்கள் இடம் பெற்றிருந்தன. வட நாட்டினர்க்கு மொழி தெரியாதென்று கூறினாலுங்கூட அதே எழுத்தில் எழுதப்பெற்றிருந்த வேறு இரண்டு சொற்களும் தெரிவிக்கவே. இவ்விருவகை மொழிகளும் தெரிவிக்காவிட்டாலும் அங்குள்ள பொம்மைகள் தெரிவித்துவிடுமே!

கொடைகளின் ஒருபகுதியும், இனிச் செய்ய விருப்பனவும் விளக்கப்பட்டுள. பின்னர் சித்தியாரின் பாயிரத்திலும் அளவியியலிலும் பன்னிரு சூத்திரப் பகுதிகளிலும் உள்ள செம்பொருள்கள் எளிய உரை நடையில் இனிது விளக்கப்பட்டுள. சிறப்பாக ஒவ்வொரு சூத்திரத்தையும் விளக்கும் சித்தியாரின் முதற் செய்யுள் கொடுபட்டு அது அச் சூத்திரத்தி லுள்ள எல்லாக் கூறுகளையும் விளக்கும் வகையையும் அச்செய்யுளி லுள்ள ஒவ்வொரு சொல்லும் எவ்வெச் சமயத்தை எவ் வெவ்வாறு மறுத்து நிற்கிறது என்பதும் மிக அழகாகவும் தெளிவாகவும் விளக்கப்படுகிறது. இடை யிடையே சைவ சமயத்தின் தனிச் சிறப்புக்களும் (பக்கம் 40, 78 முதலியன) தமிழ்ச் சிறப்புச் சொற்களின் (பரிபாடை) பொருள் கோளும் (பக்கம் 18 முதலியன) இனி தியம்பப்படுகின்றன. சித்தியாரே ஓர் ஒப்பற்ற சமய ஆராய்ச்சி நூலாதலின் அதன்கணுள்ள ஆராய்ச்சிகளின் சுருக்கமே இந்நூலாவதால், இது "சித்தியார் ஆராய்ச்சி" (சித்தியாரி லுள்ள ஆராய்ச்சி) என ஏழாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்கத் தொகையாக அழைக்கப் படுகிறது; இந்நூல் சித்தியாரைப்பற்றிய ஆராய்ச்சி ஆகாது என்பது குறிக்கொள்ளத்தக்கது.

தக்க பல மேற்கோள்கள் நூல் முழுவதும் விரவி விளக்குவதுடன் நூலிறுதியில் மேற்கோள் நூல்களின் பட்டியல் கொடுக்கப்பட்டுள்ளது. நூன் முகப்பி லுள்ள அருள் நந்தி சிவாச்சாரியாரது படம் புதுமையும் சிறப்பும் பொருந்தியதாகும்.

சித்தாந்த சாத்திரம் மிகவும் கடினமானதன்றி மிக மிகச் சிலரால் பயிலப்படுவதொரு தமிழ்ப் பெரும் பகுதி யாகும். அதனைப் பாடஞ் சொலக்கூடியவர் அருகிவரும் இக்காலத்தில் கிட்டத்தட்ட நாற்பது ஆண்டுகளாக அதனைக் கற்பித்து வருபவர் அதன் அடிப்படை நூலிற்குத் தமது தெள்ளத்தெளிந்த விளக்கத்தைச், சிறப்புச் சொற்களைப் பெரும்பகுதி நீக்கி, அருளியிருப்பது தமிழ்நாடு செய்த தவப்பயனே யாகும். இந்நூலைக் கற்றபின் சித்தியா ரன்றி ஏனைய சித்தாந்த நூல்களையும் கற்பது எளிதாகும். இந்நூல் யாவராலும் போற்றற்குரியது என்பதற்கு ஐய மில்லை. இந்நூலை வெளியிட்டருளிய திருவாவடுதுறை ஆதீனத்தார் பெரிதும் போற்றற்குரியவ ராவர்.

---

# யாழும் வீணையும்.

திருமந்திரமணி, துடிசைகிழார், சு. சிதம்பரனுர்.

தற்காலம் இசை உலகில் "செங்கோட்டி யாழ்தான் வீணை" என்று கூறுகிறவர்களும், "யாழ் வேறு வீணை வேறு" என்று கூறுகிறவர்களும் ஆக மக்கள் இருதிறப்பட்டு நிற்கிருர்கள்.

இருவரும் அவரவர் ஆராய்ச்சியிற் கண்டதைக் கூறுகிருர்களே யொழிய, ஒருவர்க் கொருவர்க்கு இருக்கும் விரோத மனப்பான்மையால் அன்று. ஆராய்ச்சி முறை இல்லாதது. ஆராய்ச்சியால் இன்றைக்குக் கண்ட முடிவு நாளைக்கு மாறலாம் ஒருவருடைய ஆராய்ச்சியே முடிவானது என்று கூறுவதற்கு இல்லை. "கல்வி கரையில கற்பவர் நாட்சில".

ஆனல் ஒருவர் கண்ட முடிபானது இன்னெருவரால் தக்க ஆதாரங்களுடன் மறுக்கப்பட்டு, வேறு ஒரு தகுந்த முடிபைக் காட்டும் வரை முன்னவர் முடிபையே அறிஞர் ஏற்றுக் கொள்ள வேண்டியதாய் இருக்கிறது. ஆதலின் முன் ஆராய்ச்சிக்காரர் பின் ஆராய்ச்சிக்காரரைக் குறித்து மனம் நோக வேண்டிய அவசியம் இல்லை. முன் ஆராய்ந்தவருடைய முடிபு தவறுதலாய் இருந்தால், பின் ஆராய்ச்சிக்காரர் முடிபை ஏற்றுக் கொள்ளத் தயக்கம் கூடாது. தவறைத் தவறு என்று கண்டபின் ஒப்புக் கொள்ளுவது வெற்றியே ஒழியத் தோல்வியன்று என்னெனின், அத்தவறுதலான முடிபே சரியான முடிபுக்கு வழி கோலியதால் என்க. ஆதலின், இருவருடைய கொள்கைகளையும் சீர் தூக்கிப் பார்த்து, இலக்கியம் (சுருதி), அறிவு (யுக்தி), அநுபவங்கட்கு எக்கொள்கை பொருந்தியுள்ளது என்று இசை உலகிற்குக் காட்டுவதே இக் கட்டுரையின் நோக்கம்.

ஆதலின், முதலில் "செங்கோட்டி யாழே தான் வீணை" என்று கூறுபவருடைய கொள்கைகளைப்பற்றி விவகரிப்பாம்.

## (I) செங்கோட்டி யாழே வீணை.

### (உ) சொல்.

யாழ் என்ற சொல்லும், வீணை என்ற சொல்லும் பண்டைக் காலத்திருந்தே தமிழ்நாட்டில் வழக்கில் உள்ள தமிழ்ச் சொற்கள்,

இரண்டும் ஒரே இசைக் கருவியைக் குறிக்கும் சொற்கள். ஆனால், பண்டைக் காலத்தில் யாழ் என்ற சொல்லையும், வீணை என்ற சொல்லையும் இடம் அறிந்து, சமயம் அறிந்து மக்கள் வழங்கினார்கள். தற் காலத்தில் வீணை என்ற சொல்லே மிகுதி யாக வழக்கில் இருக்கிறது. மக்கள் யாழ் என்ற சொல்லை அதிகமாகப் பயன் படுத்துவதில்லை.

யாழ் என்ற சொல்லும், வீணை என்ற சொல்லும் ஒரே இசைக் கருவியைக் குறித்த போதிலும், அக் கருவியை எப்போது யாழ் என்பது? எப்போது வீணை என்பது? என்ற தமிழ் மரபு வழக்கத்தில் இருந்தது. தற் காலம் அந்த மரபை மறந்து விட்டார்கள்.

உதாரணமாக :—சத்தியம் என்ற ஒன்றைக் குறிக்கத் தமிழ் மொழியில் மூன்று சொற்கள் உள. அவையாவன :—உண்மை—வாய்மை—மெய்ம்மை. இம் மூன்றும் ஒரே பொருளைக் குறித்த போதிலும் அவைகளை இடம் அறிந்து, சமயம் அறிந்து பயன் படுத்த வேண்டும்.

ஒருவன் தன்னுடைய உள்ளத்தின் கண் உள்ளுவதை யெல்லாம், அது நன்மையாயினும் தீமையாயினும், எடுத்துச் சொல்லுவது உண்மை எனப்படும்.

அப்படி ஒருவன் தான் நினைப்பனவற்றில் தீமை பயப்பன வற்றை விட்டு விட்டு, நன்மை பயப்பனவற்றை மாத்திரம் எடுத்துச் சொலலுவது வாய்மை என்னப்படும்,

"வாய்மை எனப்படுவ தியாதெனின் யாதொன்றும்
தீமையிலாத சொலல்' (குறள்)

என்னும் பொய்யாமொழியை நோக்க இது வெளியாம்.

அப்படி ஒருவன் தான் நினைத்து, பின் வாயால் மொழிந்து, மொழிந்தவற்றை நடவடிக்கையில் (action) காட்டினான், ஆனால் அது மெய்ம்மை ஆகும். (That which is proceed by active is மெய்ம்மை).

உலகின் கண் உள்ள எந்த மொழியிலும் இவ்வளவு நுணுக்கமான ஆராய்ச்சியோடுங் கூடிய சொற்மளைக் காண முடியாது.

இன்னொரு எடுத்துக் காட்டு :—தமிழ் நாட்டில் சாதாரண மாக வழங்கும் ஏரி, குளம், குட்டை, பொய்கை, ஊருணி முதலிய சொற்களை எடுத்துக்கொள்ளுங்கள். அந்தச் சொற்கள் எல்லாம் நீர் நிலை என்ற ஒரு பொருளைக் குறிப்பனவே. ஆனால்,

அந்தச் சொற்களை இடம் அறிந்து, சமயம் அறிந்து பயன் படுத்த வேண்டும். அது தான் தமிழ் மரபு. ஆன்றோர்கள் அம் மரபு தவறாமல் தான் இலக்கியங்களில் வழங்கியுள்ளார்கள்.

பயிர்கள் சாகுபடிக்குப் பயன்படும் ஓர் நிலை ஏரி ஆகும். ஆடு மாடுகள் தண்ணீர் குடிக்கவும், அவைகளைக் கழுவவும் பயன் படும் நீர்நிலை குளம், குட்டை ஆகும். மகளிர்கள் குளிப்பதற்கு மறைவாக இருக்கும்படியாக சோலைகளின் நடுவில் அல்லது, உத்யான வனங்களின் நடுவில் உள்ள நீர் நிலை பொய்கை ஆகும். ஊர் நடுவே இருந்து, ஊரார் குடிப்பதற்குப் பயன் படும், காவல் கட்டுடன் உள்ள நீர் நிலை ஊருணி ஆகும்.

ஆதலின், ஒரே பொருளைக் குறிக்கப் பல சொற்கள் இருந்தாலும் அவைகள் பயன் படும் முறையில் வேற்றுமைப்படும். தமிழ் நாட்டில் சங்க இலக்கியங்களைப் படிப்பதும், தொல்காப்பியத்தைப் படிப்பதும் குறைந்து போகவே, மரபு வழக்கும் குறைந்து போயிற்று. இது மாதிரியாகவே எல்லாப் பொருள்களையும் குறிக்கும் பல தமிழ்ச் சொற்களின் மரபு அறியவேண்டும். அறிந்து பயன் படுத்துபவனே அறிஞன் ஆவான். மரபு தெரியாமல் சொற்களை வழங்குபவர்கள் தமிழ் மொழி அறிந்தவர்கள் ஆக மாட்டார்கள். அவர்களுடைய கூற்று தமிழ் உலகில் ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது.

தமிழ் மரபு தெரியாதவர்கள் ஒரு பெரிய அதிகாரியாகவோ, அல்லது, ஒரு பெரிய பதவியிலேயோ இருக்கலாம் படிப்பில்லாத பாமர மக்கள் அவர்கள் கூறும் சொற்களை, பெரிய அதிகாரி சொல்லி விட்டார் என்று, உண்மையாகவே நம்பி, அக் கூற்றை ஆதரிக்கலாம். ஆனால், அது அதிக நாளைக்கு நிற்காது. தமிழ்மொழி இலக்கண வரம்புள்ளது. மரபு கெடாத மொழி. ஆகையால் ஒரு பொருளைக் குறிக்கப் பல சொற்கள் தமிழ்மொழியில் உண்டு. அதுபோலவே, இசைக் கருவிகளில் ஒன்றாகிய நரம்புக் கருவியைக் குறிக்கத் தமிழ் மொழியில் பல சொற்கள் உண்டு. அவையாவன :—யாழ்—வீணை—தந்தி—கின்னரம்—தண்டு முதலியன. இச்சொற்களையும் அவ்வாறே பொருள் தெரிந்து, இடம் அறிந்து, சமயம் அறிந்து வழங்கவேண்டும்.

யாழும், வீணையும் உருவத்திலும், அமைப்பிலும், உறுப்புக்களிலும் ஒன்றே. யாழுக்கும் வீணைக்கும் நரம்புகள் இணைப்பது போய், தந்திகள் ஏற்பட்ட பின் யாழுக்கும் வீணைக்கும் தந்தி என்ற ஒருபெயர் ஏற்பட்டதே யொழிய வேறின்று. ஏன் இப்போது நரம்புகளை விட்டு தந்திகளைப் பயன்படுத்துகிறார்கள்?

என்றால், நரம்புகளைப் பிராணிகளின் உடலிலிருந்து எடுத்துப் பண்படுத்தும் முறை மக்களுக்கு இப்போது தெரியவில்லை. நரம்பைப் பண்படுத்தி, யாழில் தொகுத்து, வாசிக்கும் முறை தெரிந்த பாணர்களுடைய பரம்பரை அழிந்து போயிற்று. அதனால், மக்கள் வேறு வழியில்லாமல் தந்தியைப் பயன்படுத்தத் தலைப்பட்டார்கள். திருநீலகண்ட யாழ்ப்பாணர்—பாணபத்திரர்—திருப்பாணாழ்வார் ஆகியோருக்குப் பின் அப்பரம்பரை இல்லாமற் போய்விட்டது.

கின்னரம் என்பது தற்போதுப்பிடில் (Fiddle) என்ற பெயருடன் வழங்கப்படுகிறது. இது நான்கு, தந்திகளை உடையது. 7 தந்திகள் போட்டு வாசிப்பவர்களும் உண்டு.

தண்டு என்பது இப்போது சுதிக்கு மாத்திரம் பயன்படும் தம்புராவாக வழங்கப் படுகிறது. இதற்கும் தந்திகள் நான்கே.

இதுவரை சொற்களின் தன்மையையும் அவைகள் வழங்கப் படும் மரபையும் கூறினும். இனி யாழ் உறுப்புக்களைப் பற்றிப் பேசலாம்.

### (b) யாழ் உறுப்புக்கள்.

(இவை பாணர் கைவழி என்னும் நூலிற் கண்டபடி) பக்கம் 78.

யாழுக்கும் வீணைக்கும் அமைப்பிலாவது உறுப்புக்களிலாவது வேற்றுமை இல்லை, இரண்டும் 18 உறுப்புக்களைக் கொண்டவையே. அவையாவன :—

| | |
|---|---|
| (1) பத்தல் (பத்தர்), | (10) தந்திரிகரம், |
| (2) வறுவாய், | (11) போர்வை |
| (3) நுண்துளை ஆணி, | (12) யாப்பு, |
| (4) வணர், | (13) கவைகடை, |
| (5) திவவு, | (14) உந்தி, |
| (6) கோடு, (தண்டு), | (15) மாடகம், |
| (7) முறுக்காணி, | (16) புரி நரம்புக்கோல், |
| (8) ஒலிநரம்பு, | (17) தகைப்பு, |
| (9) பண் நரம்பு | (18) ஐம்பத்தோருறுப்பு. |

இனி, கொங்குமலர் I பக்கம் 82ல் கண்டபடி காட்டுவாம்:- யாழுக்குப் பெருமபாலும்,

1. கோடு 2. பத்தர் 3. ஆணி 4. நரம்பு 5. மாடகம் என்ற ஐந்து உறுப்புக்கள் உண்டு. அவற்றுள், கோட்டினுக்கு உறுப்புக்கள் :—6. பதும்ம 7. கழல் 8. குடம் 9. தாடி 10. உள்ளி 11. தண்டு 12. குடை 13. குடுமி என்பனவும்; பத்தரின் உறுப்புக்கள் :— 14. போதிகை 15. புட்டில் 16. முகம் 17. சுவர் 18. எருத்தம் என்பனவுமாம்.

(தொடரும்.)

# இசைத் தமிழ்

கும்பகோணம், சங்கீதம் திரு. ப. சுந்தரேசன்,
இசை ஆசிரியர், அரசர் கல்லூரி, திருவையாறு.

## இசைகளின் பிறப்பு முறை.

பொழிலன்பர் பலருக்கும் அடியேனது உளங்கனிந்த ஓரிருசொல். நாம் இதுகாறும் பொழிலில் சில துணர்வாயிலாக அலகுமுறைகள் பற்றி ஆசிரிய மாணவ வினாவுரையாக எழுதி இன்றியமையாத கிளை முறையையும், நட்பு முறையையும் ஒருவாறு முடித்துள்ளோம். நிற்க, நமது பழங்காலத் தமிழ் மக்கள் இசைத் தமிழை வளர்த்து வந்த காலங்களில் ஓரியக்கத்தில் இருபத்திரண்டு அலகுகளையே மிக மிகச் செம்மைபட அறிந்து உணர்ந்துள்ளனர். இத்தலைகய அலகு நிரல்களை கணித முறையிலறிந்ததோடன்றி ஓசை முறையும் வழுவாது பலவகையானே அறிந்துள்ளனர். அவையாவும் விரிப்பிற் பெருகுமாதலான் பண்டைத்தமிழிலக்கியங்களிலே பொதிந்து கிடக்கும் இசைத்தமிழ்ப் பகுதியின், இவ்வலகு முறைகளை உரையாசிரியப் பெருந்தகையோர் பலரும் கூறாது விடுத்தனர் போலும்.

அக்குறையை அருட்டிரு விபுலானந்த அடிகளார் தமது யாழ் நூலின் கண் பலவாற்றானும் போக்கி விட்டனர் எனலாம். பிற்காலத்தில் நந்தென்னாட்டிலெழுந்து விளங்கிய வடமொழி யிசை நூல்கள் எவற்றினுள்ளும் இவ்வலகு முறைகள் கைக் கொள்ளப்பட்டு ஆராய்வோருக்கு மயக்கினைத் தருகின்றது. அஃதோடன்றி எது முதல் எது முடிபு, எனவுங் காண வாய்ப்பு அளிக்காது நின்றமையான், எதனையும் துணிந்து கூற இயலாது போயிற்று.

மேற்கூறிய குறைபாடு யாழ்நூல் கண்டு படித்துணர்ந்தார் பலருக்கும் இனி நேராது எனத்துணிந்து கூறலாம். நிற்க இனி இவ்வலகுகளை எவ்வாறுகொண்டு ஏழுபெரும் பாலைகளும் ஐந்து அந்தரப் பாலைகளும் விளங்கிற்றென ஆராயமுற்படுவாம். அஃதுபற்றி இசைகளின் பிறப்பு முறையை முன்னர் ஆராய்வாம்.

முத்தமிழ் நுட்பம் பலவும் முறைமையானே முற்பட வறிந்த அடியார்க்கு நல்லார் எனும் பெருந்தகையார் சிலப்பதிகார உரையின் கண்ணே சிற்சில விடத்து இடைப்பட்ட இசை நுட்பங் கூறுங்கால் அவை வந்தவழிக் கூறுமிடத்து இவற்றுள் முற்றோன்றியது தாரம் எனக் கூறுவர் (சில—வேனிற்காதை யுரை) ஆகவே ஏழிசைகளில் முற்றோன்றியது தாரம் எனவும் மூவகை முறையில் முற்றோன்றியது தார முறை அஃதாவது தாரக்கிரமம் எனவும் நன்கு அறிந்துணரக் கிடக்கின்றது. இம்முறையேவந்து தோன்றிய ஏழு பெரும் பாலைகளையே அடியார்க்கு நல்லார், ஆய்ச்சியர் குரவையினுட் கூறிப்போந்துள்ளார். அதனையே நமது அடிகளாரும் யாழ்நூற் பாலைத்திரிபியலில் முதன்மையாகத்தந்து நிறுவியுள்ளார்கள்.

இனி அலகுகளை ஒன்றுமுதல் இருபத்திரண்டு முடிய நிரலாகவே எழுதி அவற்றுள் நிற்கும் அலகு நிலைகளை எந்தெந்த இசைகள் கொண்டு நிற்கின்றன எனக் கூறி வருவாம்.

தனித்த அலகுகளை பொது இடு குறியாக சிறு நேர் கோடிட்டுக் காட்டுவாம்.

|-|-|-|-|-|-|-|-|-|-|-|-|-|-|-|-|-|-|-|-|-|-|

---

கூட்டு அலகுகள் :—

௧—௨—௩—௪—௫—௬—௭—௮—௯—௰—௰௧—௰௨—௰௩—௰௪—௰௫
௰௬—௰௭—௰௮—௰௯—௨௰—௨௰௧—௨௰௨.

---

முற்றோன்றிய இசை முறை :—

தாரம்-குரல்-துத்தம்-கைக்கிளை-உழை-இளி-விளரி.

---

பண்டையத் தமிழிசை வல்லார் யாழ்க் கருவியில் அமைந்த முதல் நரம்பைத் தாரம் எனக் கூறினர். தாரம் எனுஞ் சொல்லானது பழங்கால இசைத் தமிழில் தலையாய நரம்பிற்கு வழங்கிவந்த சொல்லாகும். இதனை அடியார்க்கு நல்லார் மிக்க பழமையான தலையின் தாரஞ் செய்யுந்தாரம் என்ற சொற்களாலேயே நம்மனோர்க்கு அறிவுறுத்துகின்றார்.

ஆகவே தார நரம்பின் ஒலியை ஓரோவழி ஒலியாகக்கொண்டு அடுத்துள்ள நரம்புகளின் ஒலியை அஃதாவது முன்னத னொலிக்குக்கூடி ஒலிக்கின்ற ஒலிகளை (அத னதன் அலகுகளை) உறுதி செய்ய நேரிட்டது. இனி அம்முறையை அடியிற் றருவாம்.

முத நரம்பின் வழி (தாரம்)—

தாரம்—௦-௧-௨-௩-௪=நான்காமலகில் குரல்=௫-௬-௭ அ=எட்டாமலகில்=துத்தம்.

துத்தம்—௬-௰-௰௧-௰௨=பன்னிரண்டாமலகில் கைக் கிளை=௰௩=பதின்மூன்றாமலகில்=உழை.

உழை—௰௪-௰௫-௰௬-௰௭=பதினேழாமலகில் இளி= ௰அ-௰௯-௨௰-௨௰௧ இருபத்தொன்றாமலகில் விளரி=நின்று பின்னர் உ௰உம் அலகு முதல் வலிவிசைத்தானமானது. தாரம் முதலாகத் தோன்றும், இவ்வமைப்பை நம் முன்னோர் கள் கணக்கு முறையில் அறிந்ததோடன்றி ஓசை முறையில் செவி வழியாக நன்கு கேட்டு உற்றுணர்ந்த காலை தலையாய நரம்பாகிய தார நரம்பின் ஒலியும் அதற்கு ஐந்தாம் நரம்பாகிய உழை நரம்பின் ஒலியும் தம்முள் ஒத்துநின்று கேட் போர்க்கு இன்பம் பயந்து நிற்றலையும் அறிந்தனர். ஆகவே நரம்புகள் இரண்டாக நின்றும் இரண்டுங்கூடி ஒலிகின்ற காலத்து ஒத்த ஒலியானமைந்து நின்ற தன்மை நோக்கியே முன்னதிற் பின்னது தோன்றியது என்னும் கருத்தினைத் தாரத்துள் உழைதோன்றும் எனக் கூறிப்போந்தனர். இனி உழை முதலாக ஏழிசைகளும் அலகு நிலையினை எவ்வாறு கொண்டமைந்துள வென்பதைக் கூறுவாம்.

தாரம், குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி எனவமைந்த தார நிரல் வகையில்; உழைக்கு உரிய அலகு கள் ௰௩ ஆதலான், உழை முதலாகக்கொள்ளுமிடத்து அலகு நிலையினை ௰௩ முதல் பொதுக்கூட்டு அலகு நிலையாகவும் (உழை நரம்பாக முதல் நரம்பு நிற்றலால் அஃதாவது முதல் நரம்பிற்குத் தாரம் எனுஞ் சொல்வழங்கியதால் உழை தார மாக நிற்றல் என அறியவேண்டும். அவ்வாறு கொள்ளுங் காலை) முன்னர் தார நரம்பிற்கு வட்டக் கோடிட்டுக் காட்டி, யதுபோலத் தனித்த அலகு நிலையாகவும் குறிக்கவேண்டும் தனித்த அலகு நிலையைக்காணவேண்டி முதல் நரம்பிற்கு (உழை) உரிய ௰௩ அலகினைக் கழித்துக்காணவேண்டும். அதனை இங்குக் குறித்தெழுதுவாம்.

கிளை நரம்பின்வழி (உழை) (முதல் நரம்பாகிய தாரத்தின் கிளை உழை.)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| உழை | பொதுக்கூட்டு அலகு நிலை | ௰௩ | ௰௪-௰௫-௰௬-௰௭ | நான்காமலகில் | இளி |
| | தனியலகு நிலை | ௦ | ௧ - ௨ - ௩ - ௪ | | |
| இளி | பொதுக்கூட்டு | ௰௭ | ௰௮-௰௯-௨௰-௨௰௧ | எட்டாமலகில் | விளரி |
| | தனியலகு | ௪ | ௫ - ௬ - ௭ - ௮ | | |
| விளரி | பொதுக்கூட்டு | ௨௰௧ | ௨௰௨ (தான அலகு) ௨௰௨ | ஒன்பதாமலகில் | தாரம் |
| | தனியலகு | ௮ | ௯ — — | | |
| தாரம் | பொதுக்கூட்டு | ௨௰௨ | ௨௰௩-௨௰௪-௨௰௫-௨௰௬ | பதின்மூன்றாமலகில் | குரல் |
| | தனியலகு | ௯ | ௰ - ௰௧ - ௰௨ - ௰௩ | | |
| குரல் | பொதுக்கூட்டு | ௨௰௬ | ௨௰௭-௨௰௮-௨௰௯-௩௰ | பதினேழாமலகில் | துத்தம் |
| | தனியலகு | ௰௩ | ௰௪ - ௰௫ - ௰௬ - ௰௭ | | |
| துத்தம் | பொதுக்கூட்டு | ௩௰ | ௩௰௧-௩௰௨-௩௰௩-௩௰௪ | இருபத்தோரா மலகில் | கைக்கிளை |
| | தனியலகு | ௰௭ | ௰௮ - ௰௯ - ௨௰ - ௨௰௧ | | |

கைக்கிளை :—இந்நரம்பினலகு இருபத்தொன்று. இதனையடுத்த இருபத்திரண்டாமலகு முதல் வலிவுத் தானம் உழைமுதல் முறையே தோன்றும் முன்னர்க்கூறியாங்கு தாரமும் உழையும் அஃதாவது தாரத்திலிருந்து பதின்மூன்றாமலகில் உழை நின்று இரண்டு நரம்பினொலியும் தம்முள் ஒத்து நின்றதுபோன்று இவணும் உழை தாரமாக நிற்க குரல் நரம்பு (ஐந்தாம் நரம்பாக) பதின்மூன்றாமலகில் உழையாக நின்றது.

இதனையறிந்த நமது பண்டையோர் தாரமும் உழையும் ஒத்திசைக்கும் நீர்மையை ஓர்ந்து உணர்ந்ததுபோன்று, உழையும் குரலும் ஒத்திசைக்கும் பண்பினையும் உணர்ந்து ஒன்றுணர்ந்தாற் போல் மீண்டும் ஒன்றினை உணரவாய்ப்பு தக்தமையான் குரல் எனும் இசையை ஓர்ந்து உணரத் தக்க குரல் எனக் கூறுவான்வேண்டி உழையுட்டோன்றும் ஒருங்குரல் எனக் கூறிப்போந்தனர். முன்னர்க் கூறிய செய்யுளடியினையும் இங்கு நினைவு கூர்தல் இன்றியமையாததாகும். தாரத்துட்டோன்றும் உழை, உழையுட்டோன்றும் ஒருங்குரல்.

இனி குரல் முதலாக வரும் ஏழிசைகளும் எவ்வெவ்வாறு அலகு நிலையினைக் கொண்டமைகின்றதெனக் காணுவாம். மற்ற முறைகள் யாவும் உழை நரம்பிற்குக் கொண்டவாறு கொள்ள வேண்டும்.

முதல் நரம்பிலிருந்து (தாரம்) தோன்றிய ஐந்தாம் நரம்பினைக் கிளை நரம்பு எனக் கூறுவது பழைய வழக்கு, கிளை நரம்பு உழையாதலான் உழையின் கிளை (ஐந்தாம் நரம்பு) குரல் ஆகவே முற்றோன்றிய தாரத்திற்குக் கிளையின் கிளையாகிய குரல் நரம்பினை கிளையிருகோடு என அடிகளார் வழங்குவர்.

| கிளையிருகோட்டின் வழி (குரல்) | | | (முதல் நரம்பின் (தாரம்) கிளையின் கிளை) குரல் (தாரத்திருந்து) | |
|---|---|---|---|---|
| குரல் | பொதுக்கட்டு அலகு நிலை | ௨௰௬ | ௨௰௭-௨௰௮-௨௰௯-௩௰ | நான்காமலகில் |
| | தனியலகு நிலை | 0 | ௧ - ௨ - ௩ - ௪ | துத்தம். |
| துத்தம் | பொதுக்கட்டு | ௩௰ | ௩௰௧ ௩௰௨-௩௰௩-௩௰௪ | எட்டாமலகில் |
| | தனியலகு | ௪ | ௫ - ௬ - ௭ - ௮ | கைக்கிளை. |
| கைக்கிளை | பொதுக்கட்டு | ௩௰௪ | ௩௰௫- | ஒன்பதாமலகில் |
| | தனியலகு | ௮ | ௧ -(நட்பலகு ௧) | உழை. |

| | | | | |
|---|---|---|---|---|
| உழை | பொதுக்கூட்டு | ௧௰௫ | ௧௰௬-௧௰௭-௧௰௮-௧௰௯ | பதிமூன்றாமலகில் |
| | தனியலகு | ௯ | ௰-௰௧-௰௨-௰௩ | இளி. |
| இளி | பொதுக்கூட்டு | ௧௰௯ | ௨௰-௨௰௧-௨௰௨-௨௰௩ | பதினேழாமலகில் |
| | தனியலகு | ௰௩ | ௰௪-௰௫-௰௬-௰௭ | விளரி. |
| விளரி | பொதுக்கூட்டு | ௨௰௩ | ௨௰௪(நட்புஅல்லின்நட்பு) | பதினெட்டாமலகில் |
| | தனியலகு | ௰௭ | ௰௮ நட்பிருகோடு | தாரம். |
| தாரம் | பொதுக்கூட்டு | ௨௰௪ | ௨௰௫-௨௰௬-௨௰௭-௨௰௮ | தான அலகு நிலை |
| | தனியலகு | ௰௮ | ௰௯-௨௰-௨௰௧-௨௰௨ | இருபத்திரண்டு. |

இங்கு நிற்கும் இருபத்திரண்டாமலகின் இசை வலிவுத் தானக்குரலாகும் இவ்வாறு அமைவுறும் குரல் முறையினை பழங்காலத் தமிழ்ப்பெருமக்கள் நன்கு உணர்ந்து இதனை ஒருமுறையாகவே கொண்டு குரல் முறையெனக் கூறினர். இதுவே குரற்கிரமம் எனக் கூறப்பட்டது.

முதன்மையான தார முறையில் தாரம் தாரமாக நின்று உழை, உழையாக நின்று. பின்னர் உழைமுறையில் உழை தாரமாக நின்று குரல் உழையாக நின்றது. இங்கு குரல் தாரமாக நின்று அதற்கைந்தாம் நரம்பாகிய இளி உழையாக நிற்கின்றது. இத்தகைய இளி நரம்பின் தன்மையையும் பண்டையோர் அறிந்தமை மிகவும் போற்றத்தக்கது. அஃதாவது தாரமுறையில் ஆறும் நரம்பாக நின்ற இளி, பகையாய் நின்று பின்னர் உழை முறையில் (இளி) இரண்டா நரம்பாகி நின்று இணையாகி அத்தகைய இளியே குரல் முறையில் ஐந்தாம நரம்பாகி நின்று கிளையாயிற்று, நிற்க பகை உறவு ஆகிவிடுவது தன்னுட் சேருவதன்றோ? ஆகையினாற்றான் இதனைச் சேரும் இளியென விதந்தோதினர் = குரலினுட்டோன்றிச்சேருமிளி தாரத்துட் டோன்றும் உழையுழைட்டோன்றும் ஒருங்குரல் குரலினுட்டோன்றிச்—சேருமிளி.

(தொடரும்)

## திருவாளர் சர்தார் வல்லபாய் படேல்

*நிலவுலகை நீத்த செய்திகேட்டு*

*அண்ணுமலைப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர்*

E. S. வரதராசஐயர், B. A., *இயற்றிய*

## இரங்கற் பாக்கள்

விட்டனரோ பூவை விரைந்தனரோ விண்ணேக்கித்
தட்டழியப் பாரதப்பேர்த் தையலார்—சட்டமுணர்
நல்லறிஞன் ஆட்சிமுறை நன்குணர்ந்தோன் பட்டேலாம்
வல்லபாய்ப்பேர் கொண்டமதி மான்.

தக்கா ரெனப்பரதத் தாயவளைத் தாங்கிநின்ற
முக்காலி லோர்கால் முறிந்ததே—மிக்கபுகழ்
நேருரா சேந்திரரின் நேர்ந்துபல சூழ்ச்சிசொல
ஆருளர்சொல் வல்லபையை யா.

ஊழின் அரசியலை யோர்ந்தோர் தமையெண்ணில்
ஆழி விரல்மடக்க வாங்கொட்டாச்—சூழ்திறத்தில்
தேவகுரு வொப்பான் திறலார் படேலென்னும்
காவலனும் விண்புகுந்தான் காண்.

காந்திகர்ம யோகி காந்தி யொருதெய்வம்
சாந்திவிளை பூமியெனத் தானினைந்திட்—டேந்திழையாம்
இந்தியத்தா யேற்றம் இனிதுயரச் செய்தபடேல்
அந்தகன்கைப் பட்டுமறைந் தான்.

ஆட்சித் திறத்தில் அதிகார தோரணையில் .
தாட்சியின்றி மக்கள் தமக்குழைக்கும—மாட்சியினில்
மேன்மையுற்ற வல்லபைப்பேர் மேதகையாம் பேரறிஞன்
வான்மருவப் பூமருவு மால்.

ஆராய்ந்த கல்விவலன் ஆட்சிவலன் சூழ்ச்சிவலன்
பேராண்மை கொண்டுநின்ற பெற்றியான்—தேராமல்
எத்தொழிலு மாற்றான் எனவழைத்தா னேமகவான்
இத்தரணி நீத்த தெவன்.

எண்ணித் துணிந்த தினிதுமுடித் தேயுறங்கும்
அண்ணல் அளவற்ற ஆற்றலினை—மண்ணுலகில்
மாந்தரெலாம் போற்ற மறைந்தனனே பாரதத்தாய்
சோர்ந்திரங்க வல்லபையந் தோ.

வல்லபையே நின்அறிவின் வல்லபத்தால் தென்திசைக்
வல்லபத்தை மாற்ற மறந்தனைகொல்—பொல்லாத [கோன்
ஊழ்வெல்ல வல்லுநர்யார் உத்தமசர் தார்பட்டேல்
வாழ்வுமுடிந் தெய்தினைமன் வான்.

பொருளை மதியாய் புகழைக் கருதாய்
அருள்பெருக இந்தி அணைக்கே—தெருள்பெருக
நன்றுழைத்தாய் மக்கள் நனியிரங்க வல்லபையே
இன்றிறந்தாய் சென்ற தெவண்.

எங்கும் பெருந்துயரம் எங்குங்கண் ணீரிறைப்பே
எங்குமென் செய்வோ மெனுமேக்கம்—எங்குமுன் றன்
ஆற்றலினைப் போற்று மவர்கூட்டம் வல்லபையே
கூற்றமுனைக் கொண்ட தினத்து.

செய்தி யறிந்து திகைப்பாரும் வாயாரப்
பெய்துபுகழ் நின்பெருமை பேசுநரும்—மெய்தளர்ந்து
நிற்பாரும் வானொலியை நேடுநரும் உட்கலங்க
இப்பார் விடுத்தனையீ தென்

அத்தமிக்க எங்கும் அடர்ந்ததே மிக்கவிருள்
இத்தரணி யேங்கி யிளைந்ததே—உத்தமனாய்
தன்னறிவான் ஆட்சி தனக்கொளிதந் தேமறைந்த
பன்னரும்சீர்ச் சூரன் படேல்.

ஆட்சி வருக்கத்தார் அவலமுறப் பற்பலவாம்
மாட்சி யுணர்ந்தார் மனமுருகச்—சூட்சி
நிறைந்தமனத் திண்மையொடும் நீடுபணி யாற்றி
மறைந்ததே சர்தார் மலை.

மக்கள் துயரும் வறுமையு நீங்க மதுவொழித்தாய்
தொக்க நிதியினர் வர்க்கத்தை மாற்றித் துணைபுரிந்தாய்
பொக்க மிகுந்தவர் சென்னியெ டாமற் புடைத்தொழித்
மிக்கநின் சீருயர் வல்லபை யார்சொல் விளம்புவதே. [தாய்

தலத்திற் பெரும்பாகம் கொண்டு சுதேசத் தரணியராய்
நிலத்தாட்சி யுற்றும் ஜமீந்தா ரெனவும் நிதிப்பெருக்கின்
நலத்தாற் பிறர்நலம் நண்ணாத வர்க்கம் தனைமதியின்
வலத்தால் இணைந்தனை யூனிய னேடுயர் வல்லபையே.

மன்றத்தி னின்று வழக்குரை யாடு மமயமதில்
உன்றுணைச் செல்வி பிரிவுரை தந்தியை யுள்ளடக்கி
நன்றுரை யாடிப் பினருரைத் தாய் பலர் நைந்துணரக்
குன்றே கடமை யுணர்ந்தசர் தார்ப்பெயர்க் கோமகனே.

சிட்ட னெனுமுயர் காந்திநின் ஆசான் சினந்துபெரும்
பட்டம் பதவி தமைவெறுத் தானும் பரிந்துநினக்
கொட்டும்சர் தாரெனும் பட்டமுற்றாய்பல ரும்முனைய
இட்ட வரியை மறுத்திடும் திட்டத்தி னிற்புகுந்தே.

இரும்புமனத் தானென் றிருநிலத்தோர் கூறும்
பெரும்புயத்தான் சர்தார்ப் பெயரோன்—பிரிந்தகன்றான்
விக்கிருதிக் கார்த்திகையில் மேவுறுநல் முப்பானில்
சுக்கிரநாள் பூமி விடுத்து.

---

# புலவர் தொழில்.

திரு. K. சோமசுந்தரம் பிள்ளை, B. A., B. L., தஞ்சை.

(முற்றொடர்ச்சி : துணர் உசு, மலர் சு, பக்கம் 190)

மொழி யறிவும், உயரிய நூல்களின் சொற்பொருள் நலங்களை அறிந்துகொள்ளும் திறனும், அவைகளைத் திறம்படக் கிளக்கும் இயல்பு முடைய அளவில், புலமை தன் நிறைவை எய்திடாது. பண்புடையாளரது தொடர்பு எங்ஙனம் பயிற்றொறும் அகன்றும் உயர்ந்தும் ஆழ்ந்தும் இனிமையும் நயனும் விளக்குமோ, அங்ஙனம் உயரிய நூல்களைக் கருத் தூன்றிக் கற்குந்தோறும், அந் நூல்களில் நுண்ணியதாக அமைந்துள்ள சொற்பொருணலத் தெளிவில் உள்ளம் ஊன்றி உணர, உயர்ந்து ஆழ்ந்த பொருள்கள் பொலிவுறப் புலனாகும். அவ் விழுமிய சொற்பொருளின் பயனை நுகர்ந்து அதனோடு அறிவை இரண்டற இணைக்க, அறிவொளி விளக்கத்தின் கண் உலப்பிலா இன்ப வூறல் விளையும். இவ் வின்ப விளைவில் ஒழுக்கமும் ஒட்பமும், தட்பமும் தகவுற அமையப் பெற்றுத் திளைத்தவர், ஓரோ வழி புலமையின் நிறை மாண்பினை யுற்றார் எனக் கோடல் நேரிது. இம் முறையினால் உலகக் காட்சியில் காணப்படும் பொருள்கள் யாவும் சொன்னெறிப் புலவர் தம் மனக் காட்சியிற் படின் அவைகள் விழுமியவாய் நிலையுற்று ஒளி மிகப் பெறுவது கண் கூடு.

நூலறிவே யாகும் நுண்ணறிவு, மனனும் புலனும் மாண்புற அவற்றைச் செந்நிலையினி லுறுத்தும் பெற்றிமையுள்ளது. ஆனால் அந் நூலறிவு புலனறிவுடன் கூடிப் புறப்பொருள்களைப் பயன் படுத்தி அகத்தே அப் பொருள்களின் உயிர்ப் பியல்புகளையும் அருளிய லமைப்பினையும் ஆழ்ந்து

பயின்றதினுனே தெளிவும், மெய் யின்ப யியற்கைகளே உணரும் மெய்யறிவும் கைவரப் பெறின், அஃது இன்பப் பேறு பயந்து நிற்கும் செவ்விய புலமைச் செல்வத்தினையும், பண்பினையும் எய்திய தாகும். இத் தகைய புலமைக் கலை நல மொன்றே இறைவ னருள் நிலையினைப் புலப்படுத் தும் மெய்ஞ்ஞான உணர்வினைப் பயக்கும். இஃதே விழுமிய புலமையின் முடி நிலைப் பேறென்பது தெருளற் பாலது. 'புரையுந ரில்லாப் புலமையோய்' என்ற திருமுருகாற்றுப் படை அடிக்கு உரை விளக்கும் நச்சினார்க்கினியர் 'மெய்ஞ் ஞானத்தை யுடையாய்' என்று கூறியதினுனே புலமை யென்பது யாதெனக் குறிப்பா னுணரப்படும்.

மெய் வகை யுணர்ந்த விழுமியோராகிய புலவர் பெரு மக்கள் பண்டைக் காலத்தே வெற்றுரை கிளக்கும் வெறும் மொழிப் பயிற்சியாள ரல்லர். பொருளும் சுவையு மின்றி உணர்ச்சி யின்பம் பயவாது எதுகை மோனை நிமித்தம் பொருட் செட்டோடு சொற் பெருக்கமுடன் பாக்கள் யாக்கும் சொற் பயிற்சியாள ரல்லர். பண்டைத் தமிழ்ப் புலவ ரெல்லாம் தெள்ளு செந் தமிழ் மொழியின் முந்து நூலாகிய 'தொல்காப்பியத்துப் பொருளிலக்கண அற முறைமையினை நன்குணர்ந்தவர்கள். தொல்காப்பியனார் நுவன்ற வண்ணம் உலக இயற்கைப் பொருள்களை அகமும் புறமுமான இயற்கை முறையிலே செய்யுள் யாத்து அப் பொருள்களின் இயற்கையை உயிர்ப்பும் இயலழகும் வாய்ப்ப உள்ளபடி எடுத்துக் கிளக்கும் உயரிய ஆற்றலை யுடையார். அதா அன்று, ஒன்றினை எடுத்துக் கிளக்குங் காலையிலும், கூற ஏற்பன, ஏலாதன நன்குணர்ந்து நடு நிலையிகவாது, செந் நெறிப் படரும் மனனுக்கு மாறுபா டின்றி, கூர்ந்தறியும் பரந்த உள்ளமும், அதற் கேற்பச் சொற் றரு பெரும் புலமைச் சுவையு முணர்ந்த செவ்விய நாவு முடையார். எடுத்த பொருள்களைச் சில் வகை எழுத் தால், மொழி வளத்தின் நலன் தோன்றுமாறு உணர்ச்சி

யின்பம் துளங்க விளக்கும் நுண் மாண் நுழை புல முடை யார். உணர்வரிய ஞானச் செல்வமுடைய நிறை மொழி மாந்தர். இறை மாட்சியினை யுடையராதல் பற்றி, அன்னவர் சொற் றவை யாவும் சொன்னபடித் திண்ணமாய் நடக்கும். ஒருவரை வாழவும், சாவவும் பாட வல்லுநர். கற்ற நற்றவராம் இன்னவர் கற்ற கல்விக்குத் தக நிற்றலாம் தகைமை வாய்ந்து கல்விக்கும் ஒழுக்கத்திற்கு முரிய மெல்லிய தொடர்பினை நன்குணர்ந்து அகத் தெளிவின் பொருட்டு மக்கள் வாழ்க்கையை இயற்கையோடு ஒன்றுற்றுப் படுத்து முண்மையினை உலகினர்க்கு விதந்தருளும் புலமை மாண்பினையு முடையார்.

நுண் மாண் நுழை புலத்தால் அன்பியற்றுறையிலும் அறிவியற்றுறையிலும் புலவர் பெரு மக்கள், உலகினையும் அவ் வுலகின் கண் ணுலவும் உயிர்களின் உணர்வுகளையும் மக்களுக்குப் புலப் படுத்தி அன்பும் அறிவும் நடமாடும் பாட்டுலகத்தில் தம் தொழிலை நுட்ப முற உணர்த்துவர். மக்களின் மனத்தே அறிவினையும் அன்பினையும் புலவர்கள் புனைந் துரையால் விதைக்கும் விறல் அவர் தம் தொழிலின் மாண்பினை விளங்கச் செய்யும்.

'அடிதாங்கு மளவின்றி யழலன்ன வெம்மையாற்
கடியவே கனங் குழாய் காடென்றா ரக்காட்டுட்
டுடியடிக் கயர் தலை கலக்கிய சின் னீரைப்
பிடியூட்டிப் பின்னுண் ணுங் களி றெனவு முரைத்தனரே;
இன்பத் தி னிகந் தொரீஇ யிலை தீர்ந்த வுலவையாற்
றுன்புறூஉந் தகையவே காடென்றா ரக்காட்டு
ளன்பு கொண் மடப் பெடை யசைஇய வருத்தத்தை
மென் சிறக ராலாற்றும் புற வெனவு முரைத்தனரே;
கன் மிசை வேய் வாடக் கனை கதிர் தெறுதலாற்
றுன்னரூஉந் தகையவே காடென்றா ரக்காட்டு
ளின்னிழ லின்மையான் வருந்திய மடப் பிணைக்குத்
தன் னிழலைக் கொடுத் தளிக்கும் கலை யெனவு முரைத்தனரே.'

என்ற கலித் தொகையின் (11) தாழிசைகளைப் படிக்குங்

காலே, செய் கடனறிந்து தெளிந்த அன்பின் திறத்தினைப் புலவர் உள்ளம் காட்டி நிற்பதை அறிகிறோம். உளத்தின் கண் 'அன்பினில் யாதுங் குறையிலே' என்ற அறிவும் பிற வுயிர்கள் பால் அன்பு கொள்ளும் இயற்கைப் பண்பும் இயல்பாய் அமைகின்றன. புலவர் தம் புனைந் துரையினது ஆற்றலே, வெறுங் கற்பனை யெனக் கொள்ளும் மனப் பான்மை எழுங் காலே, செய்யு ளின்பமும் பயனும் தழுவிய விழுமிய நிலே இலதாகும். இத் தாழிசைகளில் பிடியுண்ட பின் உண்ணும் களிறும், நிழ லின்மையால் வருந்தும் புறவும், கலே மானும் தம் தம் பெடையைக் காக்கும் காதலன் பும் பெரு நலனும் புலவர்க்கு முன் தோன்றிய அன்புக் குரிய நறு நிகழ்ச்சிகள் உண்மையாகக் கொள்ளுமா றமைந்த இந் நிகழ்ச்சிகளைக் கொண்டு திறம்பட உரைக்க முற்படும் தமிழ்ப் புலவர் மக்க ளுள்ளத்தில் அன்பினையும் அறிவினையும் ஒழுகலாறுகளையும் நிலே நிறுத்திய பான்மை கள் கருதி ஆயத் தக்கன. இத் தகைய களிறும் மரையும் புறவும் எண்ணிச் செய்யாதனவற்றை எண்ணிச் செய்த தாக நெஞ்சத்திற் பதியுமாறு எடுத் துணர்த்தும் புலவரது இயன் மதி யாற்றலும் அன்பு நிலேப்படுத்தும் வன்மை யும் படிப்போரது உள்ளத் துணர்வினை கட்டவிழ்த்து விடும் நிலே ஊன்றி உன்னற் பாலது. அன்பின் பிழம்பி னருகே ஞான போனகரும் மருட்கை கொள்ள, மக்களை, அறிவு நலம் கனிய, வளம் பெறும் உணர்வுடன் பேராக்க முற இழுத்துச் செல்லும் புல னழுக் கற்ற புலவர் தம் தொழில், அம்ம! மிகப் பெரிதென அக மகிழ்க. பொறி யின்பத்தையும் உயிரையும் பொருட் படுத்தாது உட னுறைந்து காதலன்பில் சிறிதும் கலங்காத உயரிய நிலே யினை யாவர் பால் களிறு கற்றதோ என வியப்புறும் வண்ணம் வகை செய்து, மக்களுள்ளத்தே அன்னு ரறியா மல் அறிவியலேயும் அன்பியலேயும் விதைக்கும் அருந் தொழில் நல்லிசைப் புலவர்களல்லாது வேறு யாவரால் இயலும்! இதனை அகநானூற்றின் குறிஞ்சிப்பாட்டு (78)

எடுத் திசைத்தல் அறிந்து இன்புறற் பாலது.

கனர்தலைக் கானத் தாளி யஞ்சி

* * * *

பொறிநுதற் பொலிந்த வயக்களிற் றொருத்த
விருப்பிணர்த் தடக்கையி னேமுறத் தழுவக்
கடுஞ்சுன் மடப்பிடி நடுங்கும்.

இவ்வாறு உள்ளத்தைக் கனிவிக்கும் இயைபினுன்றே, வரையா தளிக்கும் வள்ளன்மை மிக்க தமிழ் நில மன்னர் களும் குறுநில மன்னர்களும், பல் கேள்வித் துறை போகிய மாசில் பனுவற் புலவர்களை 'பல் நாட் பயின்று பலரொடு செல்லினுந் தலை நாட் போன்ற விருப் பொடு' எற்று அவர்களது புலமைச் செல்வத்தை நுகர்ந்து போற்றி வந்தன ரென்பது, பத்துப் பாட்டு, புறம் முதலிய சங்கத்து இலக்கியங்களுள் தெளியக் கிடக்கின்றது. புலவர்களும் அறிவா னெய்தும் உலப்பிலா அன்பினி லின்பொடு அற நெறி முதற்றே அரசின் கொற்ற மெனக் கொண்டு, தமிழகத்தைப் புரந்த பெரு மக்களுக்கு அருந் துணையா வைகின ரென்பதும் அறியப்படும்.

வாழ்க்கையினைத் தூய்மைப் படுத்தும் புலமைத் தொழிலில் படிந்த உள்ளம், தம்மை நாடி நின்றுரை முதற் கண் உவகை யுறுமாறு கூட்டுவித்துப் பின்னர்ப் பிரிய நேர்ந்த அவர் தம்மை நினைந்து நினைந்து மனங்கசிந்துருகும் இயைபுடைய நிலையினைக் கொண்டுள்ளது. இதனுன் ஓரோ வழி, புலமை மாண்பினை யுடையார் கேண்மை பிரிவின்கண் பீழை தரு மென்க. ஆகவே பல துறைப் பட்ட அரிய உயரிய நூல்களைக் கற்று விழுமிய மதி நுட்பத்து, பெரு வலி யுடையார் உவப்பக் கூடி உள்ளப் பிரித லில்லை யெனின் அன்னவர் புலவ ரல்லர் என்ப தூஉம் தானே விளக்கமாம். உவப்பக் கூடி உள்ளப் பிரிதல் எனும் நிலை புலமைக் கல்வியின் பயனுன தொழிலுக்கும் புலமை யின்பத்துள் பொருந்திய வாழ்க்கைக்கும் பெருகு

கொடுத்து முறையே அவைகளை நிறை வுற நிறுத்தும் மாட்சி தெற்றெனத் தெளிதலான் அந்நிலையினைப் புறக் கணித் தகற்றல் கூடா தென்பது புலங் கொளற் பாற்று.

புறம் அகன்று விரியாது அகத்தே மட்டும் உள்ளம் குறுகியதாய் மலரும் பரிசு வாய்ந்தோர் பிறரோடு கூடலா னெழுந்த உவத்தலையும் உரை யாடலையும் கண்டுணரா இயல் புடைய ராதலின், அன்னார் வாழ்க்கைக்கு ஏற் புடையா ரல்லர். என்னெனின், புறத்தே பரந்த அறிவு வளர்ச்சியா னெய்தும் அகத் தினிமையின் உணர்வும், உலகிய லறிவும் அவர் பாலில்லை யாதலி னென்க. புறப் பொரு ளறிவினில் பயிற்சியும் முயற்சியு மில்லாது, தம்மை யறியாதவர் பிறரை அறியாதும், பிறரை யறியாதவர் தம்மை யறியாதும், வாழ்க்கையில் பிறராற் றழுவி யேற் கும் வகை காணுது இழுக்குடையராய் இடர்ப்படுவது காட்சி யளவையா னறியப்படும். புறப் பொருளறிவு என்றதினுனே, அறிவானும் அறியப்படுவதும் உண்டாதல் புலனுகும். அறிவு அகமும், அறியப்படுவது புறமு மாதலான், புல னுணர்வுக ளொன்றே புறத்திற்கும் அகத் திற்கும் தொடர் பூட்டும். இவ் விரண்டற்கும் இயைபு காணப்படவே அகத்தைக் கொண்டு புறமும், புறத்தைக் கொண்டு அகமும் அறியப்படுமென்பது தெளிதலாயிற்று. புறப்பொரு ளறிவு ஒருவருக்குக் குன்றின் அகத்தான் அற நெறியிற் செல்லும் ஆற்ற லிலாது அன்னவர் துன்புறுவ ரென்பது அனுமானத் தானும் அறியக் கிடப்ப தோன் ருகும். எனவே, அக நிலையின் மலர்ச்சியும் தெளிவும் காணற்குப் புறப் பொருளின் விரிவு இன்றி யமையாது வேண்டப்படுவதினுன், அகத்தினையும் புறத்தினையும் முரண் படுவனவாகப் பிரிப்பது இயற்கைக்கே இன்னுத தாகும்.

அக வுணர்ச்சிக் கேற்ப, புறப் பொருள் மாறுவதும் புறப் பொருள்களின் தன்மையான் அக வியற்கையின்

பான்மை வேறுபா டுண்டாவதும் இயல்பாதலின் அகமும் புறமும் தாம் தாமே தழுவுதற் கேற்ற தகைமையும் இய லுரிமையும் கொண்டுள்ள வென்பது புலனும். இத் தகைய இயல்பு வாய்ந்த அகத்தையும் புறத்தையும் ஒன்றவைத்து, பொருட் சுவையினையும் பொருளுணர்ச்சியினையும் புலப் படுமாறு அறநெறியின் இயற்கை அழகினை எடுத் துரைப் பது புலமைத் தமிழ் மரபு. உயிர்க் குயிராய் நின்றிலங்கும் இறை நிலை தோன்ற, உயிரின் உளப் பான்மையுடன் இயற்கையை ஒன்ற வைத்து அமைத்து, இறை. உயிர், இயற்கை ஆகிய முப் பொருளுண்மையினை உலகுக்குப் பயன்பட, புறப்பொருளி னறிவானும், அக னுணர்வானும் எடுத்துக் காட்டுதல் புலமைச் செயலாகும். எனவே அக நிலையினை விளக்கப் புறநிலை அருந்துணையாக விளங்குவதி னூன் அகத்திற்கும் புறத்திற்கும் வலிய தொடர் பூட்டுவது புலமை உள்ளத் தனுபவத்தின் பயன் என்பது பெற்றும். இவ்வாறு புறப் பொருள் விரிவினிலும் அகப் பொருட் டெளிவிலும் தோய்ந்த புலமைக் கலை நலம் பிறர் மனதை எளிதிற் கவர்ந்து இன்பம் செய்யும் தொழிலால் சிறப்பா கும். இது குறித்தே, நுண்மா ணுழை புல முடையோர் செய்யுளுலகத்திற் உயிர்ப்பும் எழிலும் தோன்ற உலகப் பொருள்களை, முதல், கரு, உரிப் பொரு ளெனக் கொண்டு, செய்யுட்களை அகம் புறமென்ற இயற்கை முறையானே யாத்துள்ளார்.

அக வுணர்ச்சியின் பான்மைக் கேற்ப, புற இயற் கையைப் புலமை மிக்கார் அமைத்துக் காட்டுங் காலை, உயிரின் நிலைகளாகிய புணர்தல், இருத்தல், ஊடல், இரங் கல், பிரிதல் என்ற அக னுணர்வுகள் வலியுற்று விரிந்து மாணொளி விளக்கமும் கொள்ள அவற்றை யாவர்க்கும் பயன் படுமாறு மெய்ம்மையிற் செலுத்தி அவற்றிற்குச் சார்பாயுள்ள இடம் பொழுது செய்தியுடன் இணைத்துக் கூறுவார். இவ்வாறு மனத் தியற்கைக்கு இயைந்து

இயல்பாய் இனிமை யூட்டும் புலவரது செயல், அவர் தம் புலமைக் கல்வியின் பயனுன தொழில் வகையின் மாண்பினைத் தெற்றெனப் புலப் படுத்துவ தாகும்.

அகத்தின் வலிமையினைக் கூற வந்த பழைய சங்க காலத்துத் தமிழ்ப் பெரும் புலவர்களது செய்யுட்களில் போந்த அகம் புற மென்னும் கல்வி முறையால் விரிந்த பொருளிலக்கண அமைப்பின் முறையினைச் சற்று உற்று நோக்கின், அக வுணர்வின் எழில் நலம் மிக்க சுருக்கமாக வும், புறத் தியல்பின் சிறப்பின் வளம் விரிவுடையதாகவும் விளக்கப்பட்டிருப்பது தெளியப்படும். இங்ஙனம் உள் ளுணர்வின் இயல் நலனை நுனித் துணர்ந்ததோ டமையா மல், மெய்ப் பாடுகளை, மனத் தியல்பிற்குத் தக, பொருட் டோடு, கிளர்ச்சியும் விரைவும் தோன்ற, உணர் வாட்சி யுடன் புலமை மிக்கார் விளக்க முற்படுங் காலை, உல கியற்கை, உள் ளியற்கைகளில் தோய்ந்து தெளிந்த அவர் தம் புலமைக் கலை நலத்தின் இயற்கை மாட்சி மெய் யுணர் விளக்கந் தனில் தலைப்பட்டு, அன்னுரை அருளாட்சியில் மேம் படுதற்குரியராய் வயங்கச் செய்கிறது. இதனுன் புலன் மன மாட்சிமைகட்குரியதாய உயிர்ப் பியல்பின் ஆற்றலின் வழி பெற்ற மெய் யறிவு மெய் யின்ப யியற்கை களைத் தம் மகத்தே வழாது அறிந்து இன்பம் நுகர்தலும், அறிந்ததனை பிறர் மனமும் அவ் வின்பத் தழை வினை விரும்புமாறு உணர்வு வகையான் ஊட்டி இன்பத்தை விளைவித்தலும் புலவர் தம் தொழிலாதலும், மனத்தின் அழுக் கறுத்து அற முதலாகிய விழுமிய பயக்கும் இரு வகை யின்பத்திற்கும் பிறப்பிடம் புலமைத் தொழி லென்ப தூஉம் இனிது விளங்கா நிற்கு மென்க.

(தொடரும்)

## திருவாதிரைத் திருநாள் சொற் பொழிவுகள்.

---

தில்லைத் திருமுறைக் கழகச் சார்பில் 16—12—50 முதல் 24—12—50 முடிய ஒன்பது நாட்கள் தில்லை நடராசர் ஆலய ஆயிரக்கால் மண்டபத்தில் நடைபெற்றன. பேரறிஞர் திரு. அ. சிதம்பரநாதச் செட்டியார், M. A., Ph. D., அவர்கள் சொற்பொழிவுப் பேரவையைத் திறந்து வைத்தார்கள். சித்தாந்தப் பேராசிரியர் திரு. சபா. சிவப்பிரகாசம் பிள்ளை அவர்கள் தலைமை தாங்கினர்கள். திருவாளர்கள் ஔவை. சு. துரைசாமி பிள்ளை அவர்கள், க. வெள்ளைவாரணர் அவர்கள், ச. சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள், புரீ. சுவாமிநாதன் அவர்கள், திருநாவுக்கரசுப் பிள்ளை அவர்கள், இராசேசுவரி அம்மையார் அவர்கள், கோமதி அம்மையார் அவர்கள், இராமாமிர்தத்தம்மையார் அவர்கள் முதலியோர் சொற்பொழி வாற்றினர்கள்.

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனக் குருமகா சன்னிதானம் அவர்கள் நெறி காட்ட யாவரும் நடராசர் திருவோலக்கக் காட்சி கண்டு பேறுற்றார்கள்.

* * * * *

## தமிழ்த் திருநாள் திருவிழா.

---

திருநெல்வேலி, தருமையருள்பெறு நெல்லை அருணகிரி இசைக் கழகச் சார்பில், விகிருதி, தை, உஉ (ஞாயிறு) முதல் உஎ (வெள்ளி) முடிய (1951, பிப்பிரவரி 4—9) ஆறு நாட்கள் தமிழ்த் திருநாள் நடைபெற விருக்கிறது.

அதுபோது செய்யுள், திருமுறை, பத்துப்பாட்டு, மெய்கண்டமுறை, உலக அறிவு, மன்றும் அரங்கும் என்ற தலைப்புகளின் கீழ் பல அரிய சொற்பொழிவுகளும பிறவும் பேரறிஞர்களால் திருநெல்வேலித் தருமபுர மடத்தில் நடைபெறும். தென்காசி, மாவட்ட நீதிமன்றத் தலைவர் திரு. சு. மகராசன் அவர்கள், B. Sc., B. L, விழாவைத் தொடங்கி வைப்பார்கள். நெல்லை மாவட்டக் கல்வித் தலைவர் திரு. மு. ரா. பெருமாள் முதலியார் அவர்கள், M. A., L. T., கவியரங்கிற்குத் தலைமை தாங்குவார்கள்.

---

Regd. No. M. 4192

தமிழ்த்தாய் வாழ்க

# கரந்தைத் தமிழ்ச்சங்கம், தஞ்சை.

## சங்க உறுப்பினர்.

திங்கள் வரி: குறைந்தது எட்டணா. ஆயுள் வரி: நூறு ரூபா.

## நூல்நிலைய உறுப்பினர்.

சங்க உறுப்பினர்க்கு: அரையாண்டிற்கு எட்டணா.

பிறர்க்கு: சேர்ப்புக் கட்டணம் எட்டணா; திங்கள் வரி நான்கணா.

## தமிழ்ப் பொழிலின் கையொப்பம்.

| முன் பணம் | உள்நாடு. | | | வெளிநாடு. | | |
|---|---|---|---|---|---|---|
| | ரூ. | அ. | பை. | ரூ. | அ. | பை. |
| ஆயுள் வரி | ௫௰ | 0 | 0 | ௫௰ | 0 | 0 |
| ஆண்டு வரி: | | | | | | |
| சங்க உறுப்பினருக்கு | ௨ | 0 | 0 | ௨ | ௮ | 0 |
| ஏனையவர்க்கு | ௩ | 0 | 0 | ௩ | ௮ | 0 |

## பழந்தொகுதிகள்—குறைந்த விலை.

1, 2, 4—8 தொகுதிகள் — தொகுதி ஒன்று ரூ. ௧ ௮ 0

12, 14, 16 தொகுதிகள் — தொகுதி ஒன்று ரூ. ௩ 0 0

3, 9, 10, 11, 13 15, தொகுதிகள் நீங்கலாக 1 முதல் 16 முடிய
10 தொகுதிகளையும் மொத்தமாக வாங்கினால் ரூ. ௰௩ 0 0

(அஞ்சற்செலவு வேறு)

3, 9, 10, 11, 13, 15, 17, 18, 19, 20 தொகுதிகள் செலவாகிவிட்டன.

## அறிவிப்பு

தமிழ்ப்பொழிலுக்குரிய வரி கடிதங்கள் அனுப்பும் பொழி லுறுப்பினர்கள் பொருளாளர், கரந்தைத் தமிழ்ச் சங்கம், கருந் திட்டைக்குடி P O., தஞ்சாவூர் என்ற முகவரிக்கு அனுப்பியுதவ வேண்டுகின்றோம்.